வெளியீடு எண். 144.

உ

குருபாதம்

# சிவபோக சாரம்

(உரையுடன்)

தருஉலகநாதன்







தருமையாதீனம்

உரிமைப் பதிவு.] 1967 [விலை ரூ. 2—25.

1137

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீன ஸ்தாபகர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

பிலவங்க - வைகாசி - கரு - திங்கள்

**29—5—1967**

**அன்பளிப்பு :**

**தஞ்சாவூர்**

**நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T**



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
25-ஆவது குரு மகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 144.

73-3

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீன ஸ்தாபகர்

**ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

அருளிய

பண்டாரசாத்திரங்களுள் ஒன்றாகிய

# சிவபோக சாரம்

T.N. Olaganathan.

தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுள்ளப்பாங்கின் வண்ணம்




தருமையாதீனப்புலவர், மகாவித்துவான். சித்தாந்தக்கலைமணி,

**திரு. சி. அருணைவடிவேல் முதலியார்**

எழுதிய உரையுடன் வெளியிடப்பெற்றது.

தஞ்சாவூர் நடராஜபிள்ளை உலகநாதன், M.A., B.T.,

தருமையாதீனம்

1967

உ
சிவமயம்
குருபாதம்

# முகவுரை

**எங்கே நடத்துமோ! எங்கே கிடத்துமோ!**
**எங்கே இருத்துமோ என்றறியேன் — கங்கைமதி**
**சூடினன், தில்லையிலே தோங்தோமென நின்றுநடம்**
**ஆடினன் எங்கோன் அருள்.**

ஞானம் விளைகின்ற ஞானபூமி நமது பரதகண்டம். இதன்கண் தோன்றி வாழ்ந்து ஞானஒளியைப் பரப்பிச்சென்ற ஞானச்செல்வர் பலர். இதனுள்ளும் தென்னாடுடைய சிவன் சிறப்புற வீற்றிருந்தருளும் நம் தமிழகம் சிவஞானம் செழித்து விளையும் சிவஞான பூமியாகும். இதன்கண் தோன்றி வாழ்ந்த சிவஞானப் பேரொளியை உலகெங்கும் பரப்பிச்சென்ற சிவஞானச் செல்வர் எண்ணிலர். அவர்களில் திருமூலரும், சமயாசாரியர் நால்வர் சந்தானசாரியர் நால்வரும் குறிப்பிடத் தக்கவர்கள்.

திருமூலர் திருக்கயிலையினின்றும் தென்னாடுபோந்து, சிவபிரானது திருவருளால் திருவாவடுதுறையிலே அரசடியில் அளவில்லாத ஆண்டுகள் சிவயோகத்தில் இருந்து தமிழாகமமாகிய திருமந்திரத் திருமுறையை அருளிச்செய்தார். சமயாசாரியர் நால்வருள் மூவர் முதலிகள் தேவாரத் திருப்பதிகங்களாகிய பண்ணார்ந்த இசைத் தமிழ்த் திருமுறைகளையும், மாணிக்கவாசகர் தேனினும் இனிய திருவாசகம், திருக்கோவையார் என்னும் இயற்றமிழ்த் திருமுறைகளையும் அருளிச் செய்தார்கள். இவை அனைத்தும் தோத்திர வடிவில் அமைந்து ஓதுவார் உள்ளத்தை உருக்கி உள்ளொளி பெருக்கும் செந்தமிழ்த் திருப்பாடல்களாய் விளங்குகின்றன.

சந்தானசாரியர் நால்வருள் முதல்வர் மெய்கண்டதேவ நாயனர். அவர் வழியாக உபதேச முறையில் ஏனைய நால்வரும் ஒருவர்பின் ஒருவர் ஆசாரியர்களாய் வந்து தமிழகத்தில் அருள்ஞான ஒளியைப் பரப்பினர். இவர்கள் திருக்கயிலையில் சீகண்ட பரமசிவன் நந்திபெருமானுக்குச் செய்தருளிய உபதேசத்தை அகச்சந்தான புறச்சந்தானங்களால் இடையறாது முறையே வரப்பெற்று, அதனைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடிச் சிவானுபவச் செல்வர்களாய் விளங்கியவர்கள். அதனால், இவர்கள் தாம் பெற்ற சிவஞானச் செல்வத்தை உபதேச வாயிலாகவும், அருள் நூல்கள் வாயிலாகவும் உலகிற்கு வழங்கினார்கள்.

இம்மெய்கண்ட சந்தானத்தில் கமலைஞானப்பிரகாசர்பால் ஞானுபதேசம் பெற்று சிவானுபவம் முதிரப்பெற்று, அக்குருமூர்த்தியால், ' நீர் பலர்க்கும் அருள் ஞானத்தை வழங்கும் குருராயராயினீர் ; அதனுல், தருமையிலிருந்து பக்குவிகளுக்கு அருள்ஞானம் அளித்து ' ஞான பீடாதிபதியாய் வாழ்வீராக ' என அருள்செய்யப் பெற்று, அங்ஙனமே போந்து தருமபுரத்தில் ஞானபீடம் நிறுவி ஆதிபரமாசாரிய மூர்த்திகளாய் எழுந்தருளியிருந்து பலர்க்கு அருள்ஞானுபதேசம் செய்தும், அருள் நூல்கள் பல அருளியும் சைவசித்தாந்த சமய பரிபாலனம் செய்தருளியவர்கள் ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

இவர்கள் தமது சிவானுபூதி நிலையிலே அவ்வப்பொழுது அருளிச்செய்த வெண்பாக்களே ' **சிவபோக சாரம்** என்னும் அருள் நூலாய் இப்பொழுது இலங்குகின்றன. சிவபோகமாகிய சிறந்த பயனைத் தருதல் பற்றி, இந்நூல் இப் பெயர் பெற்று விளங்குகின்றது. ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தங்கள் அனுபவங்களையே எடுத்து அருளிச்செய்தது பற்றி, இதற்கு ' அனுபூதி மாலை ' என்ற பெயரும் உண்டு. இந்நூலின் அனுபவச் சிறப்பை இதன்கண் உள்ள வெண்பாக்களில் ஒன்று இரண்டை ஓதினுலே தெளியலாம். ஞானுசாரியரது அனுக்கிரகத்தால் உண்மை ஞானத்தைக கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த சிவஞானி யரை இந் நூல் நிட்டையிலே சென்று நிலைத்து நிற்கச்செய்யும் தன்மை வாய்ந்தது. இதன் பொருளை ஒருவகையாலேனும் விளக்குதற்கு ஓர் உரை இருந்தால், அது பலர்க்கும் பயன்படும் என்னும் கருணைகாரணமாக இப்பொழுது தருமையாதீனத் தின் 25 ஆவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து அருளாட்சி புரிந்துவரும் **ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அடியேனுக்கு ஏறக்குறைய இருபதாண்டுகட்கு முன்னரே இந்நூற்கு ஓர் உரை எழுதுமாறு பணித்தருளினுர்கள். மகாசந்நிதானத்தில் எழுந்த அருளாணையின் வழி நிற்றல் கடனுதலின் இவ்வனுபவ நூலுக்கு என் அறிவுசென்ற அளவிலே திருவருளை முன்னிட்டு உரையெழுதத் தொடங்கி ஒருவாறு முடித்து மகாசந்நிதானத் தில் சமர்ப்பித்தேன். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள் அதனை ஏற்றருளித் திருவுளம்பற்றிய வண்ணம் 1947 ஆம் ஆண்டில் இவ்வுரையின் முதற்பதிப்பு தருமை யாதீனத்தின் வெளியீடாக வெளிவந்தது. அன்பர்கள் பலர் பெற்றுப் பயனடைந் தனர். அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் திருப்பனந் தாள் காசிமடத்து அறக்கட்டளை ஸ்ரீ ஆதிகுமரகுருபரர் சைவசித்தாந்த ஓராயிரம் வெண்பொற் காசுகள் பரிசுத் தேர்வு முதலியவற்றிலும் உரைபாடமாக வைக்கப் பட்டது.

இங்ஙனம் பலருக்கும் பயன் தந்து, சித்தாந்த ஞானம் பலரிடத்தும் பரவு தற்கு ஒரு வாயிலாய் அமைந்த இவ்வுரையினை இரண்டாம பதிப்பாக வெளியிடுமாறு மீளவும் திருவுளம் பற்றியருளிய **ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்** அருளாணையின் வண்ணம், இவ்விரண்டாம் பதிப்பு, தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளது **பிலவங்க ஆண்டுக் குருபூஜை விழாமலராக** வெளிவருகின்றது.

இந்நூலின் பத்தாவது பாடல், பின் வந்தோர் வாக்காதல் வேண்டும் என நான் எனது உரையிற் குறித்திருந்ததனை, அப்பாடலும் இந்நூலுள் மரபாக ஓதப் பட்டு வருவது என்னும் காரணத்தால் முதற் பதிப்பில் ஒருவாறு பதிப்பித்தமையின், இப்பதிப்பிலும் அஃது அவ்வாறே பதிப்பிக்கப்பட்டது. ஆதிபரமாசாரியர் அருள் நூலை உரையுடன் இரண்டாம் பதிப்பாக வெளியிட்டு உலகிற்கு உதவத் திருவுளம் பற்றிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் அருட்டிறத்திற்குச் சைவ உலகம் என்றும் குன்று நன்றியறியும் கடப்பாடுடையது.

இவ்வுரையின் முதற்பதிப்பு, அடியேன் காஞ்சியில் பணியாற்றியிருந்த காலத்தில் வெளிவந்தது. அடியேன் ஆதீனக் கல்லூரியில் பணியாற்றும் இவ் வமையத்தில் இதனை இரண்டாம் பதிப்பாக வெளிவரத் திருவுளம் பற்றி அடியேனை இப்பணியில் ஈடுபடுத்தியருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்கள் திருவடிக் கமலங்களுக்கு எனது மனமொழி மெய்களாலாகிய வணக்கங்களைச் செலுத்திக்கொள்கின்றேன்.

இஃது அச்சாகுங் காலத்தில் பிழை திருத்தி உதவிய தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர் சிரோமணி, வித்துவான். **திரு. வி. சபேசனார் அவர்கட்கும்** என் நன்றி உரியது. இவ்வுரை நூலினைத் தமிழுலகமும், சைவ உலக மும் பெற்றுப் பயனடைவனவாக.

இங்ஙனம்,
அடியேன்,
**சி. அருணைவடிவேல்.**

தருமபுரம்.
*29—5—1967.*

சிவமயம்

குருபாதம்

# முதற்பதிப்பின் முகவுரை

மனவாக்குக் காயமுயிர் மன்னியசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும் — நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன்.

(குருஞானசம்பந்தர்)

கவிதை, கனிந்த உள்ளத்தின் எழுச்சி. உள்ளக்கனிவு வாழ்க்கையின் பண்பாட்டான் உண்டாவது. வாழ்க்கையும் தெய்வவாழ்க்கையாயின் அதன் விளைவைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ! அனைவர்க்கும் வழிகாட்டுவதும், வாழ்விப்பதும், வசப்படுத்துவதும் அவ்வாழ்க்கையே.

இத்தகைய தெய்வவாழ்வில் ஈடுபட ஒருவரை உயர்தனிச் செம்பொருளே ஆட்கொள்ளுமாயின் அவர்தம் உள்ளத்தினின்றும் எழுந்த கவிதைகளே உயிர் வாழ்விற்கு ஒளி தருவன. இக் கவிதைகள், மதிப்பிடுவார் மனப் பண்பாட்டிற் கேற்ப உயர்வு விளக்கிநிற்கும் ஒளி வயிரங்கள் போல, ஆன்மாக்களின் பக்குவநிலைக் கேற்ப அறிவொளியை - அக அமைதியை அள்ளி வழங்குவன.

இத்தகைய அருட்கவிதைகளைத் தந்த மெய்ஞ்ஞானிகள் கவிதைக்காகத் தோன்றியவர்களல்லர்; புகழ்தேடப் பொருள்தேடத் தோன்றியவர்கள் அல்லர்; ஆனால் அவர்கள் வாய்மொழிகள் யாவும் அறிவுவரம்பாக்கும் அருமறைக் கவிதைகளே! அவைகள் அவர்களைத் தேடியடைந்து அமரத்வம் அடைகின்றன. கவிதையின் நிலைத்தவாழ்வு கல்விஞானியின் மனத்தில் விளைவன அல்ல. சிவஞானியின் சிந்தையிலேயே விளைவன.

அக் கவிதைகளே அறிவுத் தெய்வம் விளங்கும் பொழில்கள். பொருள் மணம் வீசும் பூக்கள். அநுபவத் தேன் சொரியும் அரவிந்தங்கள். அத் தேனை அருட்சிறைதாங்கும் ஆன்மாக்களாகிய வண்டுகளே உண்டு பயன்கொள்வன.

அத்தகைய உள்ள விருந்துகளே - உயிர் மருந்துகளே அநுபவ ஞானிகளின் அருள்வாக்குகளாக வழிவழி வந்து சிவபோகம்பெறும் தெளிந்த ஞானத்தைத் தெரிவிக்கின்றன.

அநுபவஞானிகளிற் சிலர் தங்கருமஞ் செய்வாராகத் திகழ்ந்தனர். சிலர் தாம்பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற கருணையுள்ளத்தோடு தாம்கண்ட பயிற்சியின் முதிர்ச்சியை எல்லாரும் எக்காலத்தும் அடைந்து ஈடேற அருளுள்ளங் கொண்டு அருணூல்களை யாக்கித்தந்தனர். அருட் சந்தானத்தையும் அவனியில் நிலைபெறுத்தினர். பொருள் அருள்வழியே சேர்ந்தது. அதனாற் பசுபுண்ணியமும், பதிபுண்ணியமும் இடையீடின்றி நடைபெற்றுவருகின்றன.

அத்தகைய இடையீடில்லாத எழிற்பரம்பரையில் நந்திபரம்பரையும் ஒன்று, அந் நந்திகள் நால்வரில் சனற்குமாரநந்தியின் வழிவந்த மெய்கண்டசந்தானத்து குருமூர்த்தமாக விளங்கியவர்கள் இச் சிவபோகசார நூலாசிரியராகிய **ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்.**

இவர்கள் திருத்தருமபுரமாகிய ஞானராஜதானியையும் நல்கிப், பண்டார சாத்திரங்களாகிய வரம்பியல் நூல்களையும் "குறிவழி அநுபவம் குருமொழி முதனூல்" துணைக்கொண்டு அருளிச்செய்தார்கள். அவற்றுள் ஒன்று இந்தச் சிவபோகசாரம்.

சிவபோகமென்பது; ஆன்மாவானவன் தனது சக்தி நிரோதகமான ஆணவமல முதலானவற்றை நீங்கி வற்றாத அலையாத சிவானந்தப் பெருங்கடலில் திளைத்துச் சிவனும் தானும் ஒன்றுமன்றி இரண்டுமன்றிக் கலந்தநிலையில் விளைவது. இந்நிலையினையே இவ்வாசிரியர் முத்திநிச்சயத்து "உள்ளமல நீங்கி ஓங்கு சிவானந்த வெள்ளம் திளைத்து அதுவாய் மேவுதல்" என்றும், "பிரியா இருள் அருளால் நீங்க இன்பாய்த் துன்றல் சிவபோகம்" என்றும் விளக்கிஅருளினார்கள். இப்போகமே ஆன்மாக்கள் எய்தத்தகுவது; சாரமானது. இதனையே சிவசாரமெனவும், பரசுகமெனவும், சிவானந்தமெனவும் ஞான நூல்கள் கூறும். இத்தகைய சிவபோகமாகிய சாரத்தைக் கூறுவதால் இந்நூல் **சிவபோகசாரம்** என்னும் பெயர்த்தாயிற்று.

இந்நூல் அநுபவநிலை கொண்டு உண்மை உணர்த்துவது. வெண்பா யாப்பால் அமைந்தது. யாப்பியலுக்காகப் பொருள் நயத்தை இழக்காமல் பொருள்வழிச் செல்லும் சொற்பிணைப்புக்களை உடையது. நூற்று நாற்பத்துமூன்று பாக்களைக் கொண்டது. ஆன்மாக்களுக்கு அநுபவம் முதிரமுதிர அந்நிலையினின்றும் மேன்மேலவாகிய நிலைகளைக் காட்டி அழைத்துச் செல்லும் வழிகாட்டியாக உள்ளது.

## முதற்பதிப்பின் முகவுரை

இது ஒரேகாலத்து ஒருசேர ஆக்கப்பெறாது சிவாநுபவநிலே சித்திக்கச் சித்திக்கக் கண்டுகாட்டும் கருணை உள்ளம் ஊக்க எழுந்ததோர் நூலாதலின் இதனை முத்தி நிச்சயப் பேருரை ஆசிரியர் வெள்ளியம்பலவாணர் சிவபோகசார மென்றுது "அநுபூதி மாலை" என்றும், "அநுபூதி மாலையார்" என்றும், "அநுபூதி வெண்பா" என்றும் வழங்குவர். இவ்வழக்கு இந்நூலின் அருமை பெருமைகளை அறிவிக்கும் சான்றாகும்.

இந்நூலின் கடவுள் வாழ்த்து "சித்திதருநாதன்" என்பது. இவ்வாழ்த்து தெய்வ வணக்கமன்றிக் குருவணக்கமே கூறுகின்றது. இவ்வாறே முத்தி நிச்சயத்திலும் "சீர்மேவும் ஆரூர்" என்ற வெண்பா குரு வணக்கமே கூறுகின்றது; அதற்கு விரிவுரை எழுதிய வெள்ளியம்பலவாண முனிவர் "**சிவனும் குருவும் ஒன்றாகலின் ஆசிரியர் வணக்கமே தெய்வ வணக்கம் என்க**" எனக்கூறி, **आचार्यश्शिव एव स्यादनयोरन्तरं नहि** என்பது முதலிய ஆகம வாக்கியங்களையும், "பரம் பிரமம் இவன் என்றும்" என்ற சிவஞான சித்தியார் செய்யுளையும் எடுத்துக் காட்டி விளக்கினார்கள். முத்தி நிச்சயத்தில் "சீர் மேவும் ஆரூர்" என்ற பாடலில் தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் உணர்த்தும் முறையான் "திகழ் முத்தி நிச்சயம் ஒன்று ஆவதென மொழிவேன்யான்" என்று நுதலிப் புகுந்தார்கள். இந் நூற்கண் குருவணக்கமாக எழுந்த "சித்தி தருநான்" என்ற பாடலில் குரு வணக்கமன்றி நூற் பெயர் குறிக்கப் பெறாமையின் இந்நூல் குருநாதன் தம்முடைய அநுபவங்களாகப் பல்வேறு காலத்து நிகழ்ந்தவற்றை அவ்வப்போது வெண்பா யாப்பால் வெளிப்படுத்தினர் என்பதும், அவை தொகுக்கப்பெற்றன என்பதும் ஒருவாறு துணியப்பெறும்.

1907-ம் ஆண்டில் ஒருமுறை இந்நூல் சிவஞான விளக்கத்துடன் சேர்ந்து வெளிவந்திருக்கின்றது. அப்பதிப்பில் நூற்றுமூன்று செய்யுட்களே உள்ளன. ஆசாரிய வணக்கமாக உள்ள பாடல்களில் "சித்தி தருநாதன்" ஒழிய ஏனையன இல்லை. இவ்வாறாக நூற்கண்ணும் இருபத்தேழு பாடல்கள் இல்லை. பாடல்களின் முறைவைப்பும், ஆதீன வெளியீட்டைப் போன்று கோவைப்பட, பொருளமைதிக்கேற்ப இல்லை.

பின்னர், தருமையாதீனத்து இருபத்துமூன்றாவது குருமூர்த்தியாக எழுந்தருளியிருந்த **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** நூலறிவும் நுண்மாணுழைபுலமும் பெற்ற விழுமியோர்களாதலின், சீகாழி, தமிழ்ப்பேரறிஞர், தருமபுர ஆதீன வித்வத்சிகாமணி, ஸ்ரீமான், ப. அ. முத்துத் தாண்டவராயப் பிள்ளை அவர்களைக் கொண்டு, அவர்கள் மூத்த மகனாரும் மும் மொழிப் புலவரும் ஆதீன வித்துவானுமான, ஸ்ரீமான். ப. மு. சோமசுந்தரம் பிள்ளை M. A., L. T., அவர்களுடைய ஆங்கில மொழிபெயர்ப்புடன் 1932ம் ஆண்டு வெளியிடுவித்தார்கள். இப்பதிப்பிலேயே பாடல்கள் பொருளுக்கேற்ப முறையே தொகுக்கப்பெற்றன. பாடங்களும் சிறந்த சித்தாந்தக் கருத்துப் பிறழாத நிலையில்

காணப்பட்டன. பின்னர் 24ம் குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் 1937ம் ஆண்டில் திரும்பவும் அச்சிடுவித்து வழங்கினார்கள்.

இப்போது 25ம் பட்டத்து எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இந்த ஞானானுபவ நூலுக்குச் சிறந்ததொரு உரையும் இருப்பின் பெரிதும் பயனுமே என்று திருவுளத்தடைத்து, காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான், திரு. சிவ. அருணைவடிவேலனாரது அருணூலாராய்ச்சியைக்கண்டு அவர்களை உரையெழுதுமாறு பணித்தார்கள். அங்ஙனமே அவர்கள் எழுதிய உரையுடன் இது வெளிவருகின்றது.

இவ்வுரை படிப்பவர்கட்குச் சிவஞானபோதமாபாடியப் போக்கை நினைவூட்டாமலிராது. தக்கஇடத்து இலக்கணக் குறிப்புக்களும், கொண்டு கூட்டும், நயங்களும், மேற்கோளும் அமைந்து விளங்குகின்றது. இது ஒரு அநுபவநூலுரையாக இருந்தும், சித்தாந்த சாத்திரங்களிற் புகுவார்க்கும் விளங்கும் வண்ணம் பல நுணுகிய கருத்துக்கள் சுருங்க விளங்க 1, 2. 21 முதலிய பாட்டுரைகளில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

இவ்வுரை நண்பர் திரு. சிவ. அருணைவடிவேலனாரது ஆன்ற சாத்திரப் பேரறிவிற்கும், இலக்கண வரம்பியலறிவிற்கும் பெரிய எடுத்துக்காட்டாக இலங்குகிறது.

இந்நூலின் 17, 43, 77, 95, 109ம் பாடல்கள் முத்திநிச்சயப் பேருரையில் மேற்கோளாக எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை இவ்வுரையோடு ஒத்துநோக்கியின்புறற்குரியன.

" உள்ளதுதான்போமோ ", " ஈசன்பலகினன் " " தேசம் சிவாலயம் " என்ற 104, 105, 106 மூன்று பாடல்களும் சூத்திரசமாதியைத் தொழுதமையால் பாவத்திற்கு உள்ளானீர்கள் என்ற சிலர் வார்த்தையைக் கேட்டுத் தஞ்சையரசன் ஞானபுரீசர் ஆலயத்தை இடிக்கத் தொடங்கிய போது இவ்வாதீன 7-வது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் தம்மிடத்து வந்து தெரிவித்த அடியார்களை நோக்கிக் கூறியதாக ஆதீன வரலாறு கூறும். ஆதீன அடியார்களுள் ஒருவரும், கந்தபுராணச் சுருக்கநூலின் ஆசிரியருமாகிய சம்பந்தசரணாலய முனிவர் ஒருகால் மைசூரரசர் விரும்பியபடி ஆங்குச் சென்று அரசருடன் உரையாடிக்கொண்டிருக்கும்போது, அரசர் முனிவரை நோக்கி உங்களது குருத்தானத்திலுள்ள சீடர்கள் என்னசெய்துகொண்டிருப்பார்கள் என்று வினவ, அதற்குச் சுவாமிகள் இதிலுள்ள 140-வது பாடலையே விடையாகக் கூறி அருளினார்கள் என்ற வரலாறும் நினைவுக்குக் கொண்டுவரத்தக்கதாம்.

## முதற்பதிப்பின் முகவுரை

இந்த அநுபூதி வெண்பா என்னும் சிவபோகசார ஞானநூல் தருமை யாதீனத்து 25-ம் குருமூர்த்தியாக எழுந்தருளியிருந்து அருட்செங்கோல் செலுத்தும் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக** ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஜன்ம நக்ஷத்திரத்திருநாளன்று வெளிவருகிறது. முதல் ஞானமுதல்வர் திருவாக்கு இருபத்தைந்தாவது ஞானமுதல்வர் பிறந்தநாட் பெருவிழாவில் வெளிவருதல் மிகப் பொருத்தமானதே. அதிலும் இறுதிக்கண் வாழ்த்துடன் 144 பாக்களையுடைய இந்த ஞானநூல், 144-வது ஆதீன வெளியீடாக வெளிவர இருக்கின்ற திருவருள் வாய்ப்பு பெருவிம்மிதத்தை அளிப்பதொரு நற்குறிப்பாகும்.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் தெய்வத்தமிழ்நூல் வெளியீட்டில் மட்டுமின்றி இலக்கண இலக்கியச் செந்தமிழ்நூல் வெளியீட்டிலும் பெருவிருப்புக் கொண்டுள்ளார்கள். தமிழ்வளர்ச்சிக்கென்றால் எத்தகைய பெரிய உதவியையும் செய்பவர்கள் என்பதை பல்கலைக்கல்லூரி நிறுவியதும், கலைக்களஞ்சியங்கட்டப் பெரும்பொருள் அளித்ததும்முதலான நிகழ்ச்சிகள் தெற்றென விளக்கும்.

இத்தகைய அருட்குரவரவர்களது பிறந்தநாளாகிய சர்வசித்து ஆண்டு ஐப்பசித்திங்கள் உச-ம் நாள் சோமவாரத்தன்று வெளிவரும் இதனைச் செந்தமிழ்ச் சைவ உலகம் ஏற்று மகிழ்ந்து உய்யுமாக.

இவ் வெளியீட்டுப்பணியில் அடியேனையுந் தொண்டுகொண்ட செந்தமிழ்ச் சொக்கர் திருவடி என்றும் மனத்தகத்திருந்து இயக்குமாக.

இங்ஙனம்,

தருமபுரம்,
7—11—47.

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
**வித்துவான், ச. தண்டபாணி தேசிகர்,**
தமிழ்ப்பேராசிரியர்,
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள்
செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

குருபாதம்

## ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# அருள் வரலாறு

தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஏறக் குறைய 450 ஆண்டுகட்கு முன்னர், கார்காத்த சைவ வேளாளர் குலத்தில், சிவ பக்தி, சிவனடியார் பக்திகளிற் சிறந்த சுப்பிரமணியப் பிள்ளை என்பவர்க்கும் அவர் வாழ்க்கைத் துணைவியாகிய வான்தரு கற்பின் மீனாட்சியம்மையார்க்கும் தாம் செய்த சிவபூசைத் தொண்டின் புண்ணியப் பயனால் மங்கல நன்முகூர்த்தங் கூர்ந்த ஒரு சோமவார தினத்தன்று சற்புத்திரர் ஒருவர் திருவவதாரஞ் செய்தருளினார். தாய் தந்தையர் கழிபேருவகையுற்று அவருக்கு, 'ஞானசம்பந்தர்' எனத் திருப் பெயரிட்டு அருமையாக வளர்க்க வளர்ந்த அவர், பதினாறும் ஆண்டிற்குள் தமிழ் மொழி வடமொழி இரண்டினும் மிகவல்லுநராய், ஆகம சாத்திரங்களெல்லாம் கற்றுத் தெளிந்து நல்லொழுக்கம் மிக்கிருந்தார்.

இங்ஙனமிருந்து வரும் நாட்களில் ஒருநாள் ஞானசம்பந்தருடைய தாய் தந்தையர்கள், தங்களுடைய ஆன்மார்த்த மூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுளை வழிபடும் அவா மிக்கு மதுரையம்பதிக்குப் புறப்படுங்கால், தம் அருமை மகனா ராகிய ஞானசம்பந்தரையும் உடன் அழைத்துச் சென்றார்கள். சென்று, அண்ணல் ஆலவாயனையும், அன்னை அங்கயற்கண்ணியையும் வழிபட்டுக்கொண்டு அங்கேயே சின்னாள் தங்கியிருந்தனர். பின்னர்த் தங்களூருக்குத் திரும்பும் நிலையில், தம் புதல்வராகிய ஞானசம்பந்தரையும் அழைக்க, அவர் தாய்தந்தையர்களைப் பார்த்து, 'என் உயிருக்குத் தொடர்ந்துநின்ற தாய் தந்தையர்கள் இவ்வாலயத்தின் கண்ணே இருக்கையில், அவர்களை விட்டுப் பிரிந்து உடலுக்குத் தாய் தந்தையராகிய உங்க ளுடன் வாரேன்' என்று, பல சாத்திர வாயிலாக அமைதியும் ஏதுவுங் கூற, அவர்கள் ஒருவாறு மனந்தெளிந்து மதுரையிலேயே இருக்குமாறு அவரைவிட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் சென்றனர்.

பின்னர், ஞானசம்பந்தர் பொற்றாமரைப் பொய்கையிற் குளித்துக் காதற் கசிவொடு நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு ஆலவாயரனையும் அங்கயற் கண்ணியையும் வழிபட்டுப் பன்னாள் வதிந்து வருகையில், பொற்றாமரைப் பொய் கைக் கரையிற் சிவனடியே சிந்திக்கும் அடியார்கள் சிலர், சிவபூசனை புரிந்து ஆனந்தக் கண்ணீர் அருவியாகப் பண்ணினீடிய பதிகம் பல ஓதுதலைக் காது

பெற்ற பயனைக் கேட்கலுற்றார். முன்னைத் தொடர்பால் அவர்க்கும் அவ்வண்ணம் சிவபூசனை புரிதல் வேண்டும் என்ற எண்ணம் தழைத்தது. அதனால் ஆலவாயான் திருமுன் சென்று நின்று பண்ணிசையால் பணிந்து வேண்டிக்கொண்டார். ஒரு நாள் இரவு கடம்பமர் செல்வர் அவர்தம் கனவின்கண் எழுந்தருளி, 'ஞான சம்பந்தா! நாம் சிவலிங்க ரூபத்தில் பெட்டகத்தோடு பொற்றாமரைப் பொய்கையின் ஈசான மூலையில் இருக்கின்றோம். அங்குச் சென்று மூழ்கியெடுத்து உன் விருப்பப்படி பூசிப்பாயாக!' என்று அருளிச் செய்து மறைந்தார். ஞானசம்பந்தர் விழித்தெழுந்து, 'என்னே விந்தை!' என வியப்புற்றுக் கண்ணுதலின் பாதம் நண்ணும் ஆசையால் ஆனந்தக் கூத்தாடிப் பாடிப் பரவிய வண்ணமாக, வைகறைப் போதிலே பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஈசான பாகத்தில், நீரில் மூழ்கிக் காணுங்கால், பெட்டகக் கோயிலொடும் அவர் கையில் சொக்கலிங்கப் பெருமான் வந்தருள, ஆர அணைத்தெடுத்துக் களிப்புமீக்கூர ஆடிப்பாடி, சந்நிதானத்திற் போந்து, ஆலவாய்ச் சொக்கரை அவர்விழி அன்புநீர் சொரிய வழுத்தி,

"கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில் வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே!"

என்னும் சொக்கநாதக் கலித்துறையைப் பாடி, "அடியேன் விழைந்த வண்ணமே அருள் செய்தீர்; இனி, இச் சிவலிங்கத்தை வழிபட்டு உய்தற்கேதுவாகிய சிவ ஞானோபதேசஞ் செய்தருளும் ஞானாசாரியரையும் காட்டி யருளல் வேண்டும்" என்று விண்ணப்பித்து விடைபெற்றுக்கொண்டு தம்மிருக்கையிற் புகுந்தார். அன்று இரவும் மதி சூடிய அவ் வழகரே மீட்டும் அவரது கனவில் தோன்றி யருளி, 'ஞானசம்பந்தா! திருவாரூரின்கண் சென்று நமது உபதேச பரம்பரையில் வந்த ஞானப்பிரகாசனிடத்தில் ஞானோபதேசம் பெற்று நம்மை வழிபட்டுவருவாயாக!' என்று அருளிச் செய்து, அவ்வண்ணமே திருவாரூரில் ஞானப்பிரகாச தேசிகர் கனவிலும் தோன்றி, 'ஞானப்பிரகாச! சோமவார தினத்தன்று உன் மாட்டு வருகின்ற நமது ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசஞ் செய்து, சிவலிங்க பூசையும் எழுந்தருளப்பண்ணி வைப்பாயாக' எனக் கட்டளையிட்டுக் கரந்தருளினார்.

ஞானப்பிரகாச தேசிகர், சோமசுந்தரக் கடவுள் தம்மேல் கருணை கூர்ந்து கனவில் தோன்றிக் கட்டளையிட்டருளியவாறு திங்கட்கிழமை காலையிலெழுந்து போந்து கமலாலயத்தில் நீராடி நாளும் செய்துவரும் அருள் ஒழுக்கமான பூசை முதலியவைகளை முடித்துக்கொண்டு, சிவாலயத்திற் சென்று, தியாகராசப் பெருமானைக் கண் களிப்பக் கண்டு வழிபட்டுச் சித்தீச்சரத்திலுள்ள தமது உபாசனா மூர்த்தியாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் சந்நிதானத்தில் கிழக்கு நோக்கி வீற்றிருந்து, ஞானசம்பந்தர் வருகையை விரும்பி எதிர்பார்த்தவண்ணமிருந்தனர்.

இவர் இவ்வாறிருக்க, ஞானசம்பந்தர், கனவில் தமக்குச் சோமசுந்தரக் கடவுள் கட்டளையிட்டருளியதைக் கேட்டுத் துயில்விட்டெழுந்து மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பெய்தி உள்ளம் நெக்குருகிக் கண்களில் நீராடத் தோத்திரித்து வைகறையில் சிவாலயத்திற்குச் சென்று, பொற்றாமரைப் பொய்கையிலே மூழ்கி நித்திய கருமானுட்டானங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு ஆலவாய்ச் சொக்கனையும், அங்கயற்கண்ணியையும் வழிபட்டு வணங்கி அருள் விடை பெற்றுத் திருவாரூர் நோக்கிப் புறப்பட்டு வருங்கால், இடையிலுள்ள திருவானைக்காவில் திருவெண்ணாவலுறை செஞ்சடையப்பரை வழிபட்டும், மற்றும் பல திருத்தளிகளை வழிபட்டும், சோமவாரத்தன்று திருவாரூரை யடைந்தார். கமலாலய தீர்த்தத்தில் மூழ்கி நாளும் செய்யும் நல்லருளொழுக்கங்களை ஆற்றிக்கொண்டு, சிவாலயம் புக்குத் தொழுது வணங்கிக் குருநாதனுடைய அருட்காட்சி என்று கிட்டுமோவென, ஆசையால் தாழ்ந்து கவர்ச்சியுற்றவராய் வலம் வருகையில் சித்திச்சரத்தின்கண் எழுந்தருளியுள்ள தக்ஷிணாமூர்த்தி சந்நிதானத்தில் கிழக்குத்திசை நோக்கிப் பெருங்கருணைத் திறத்தொடும் வந்து மல இருணீக்கியருளும் ஞான ஞாயிறேயென வீற்றிருக்கும் குருமூர்த்தியாகிய ஞானப்பிரகாசரைக் கண்டார். கண்டவுடன் தமக்குக் கனவில் உணர்த்தியருளப்பட்ட ஞான குரவர் இவரே யெனத் தெளிந்து தாயைக் கண்ட பசுக்கன்றே போல விரைந்து சென்று அவரது திருவடி மலர்களில் வீழ்ந்து வணங்கினார்.

ஞானப்பிரகாச தேசிகர் ஆராவன்பின் அருளொடும் ஞானசம்பந்தரைத் தம் இரு கைம்மலர்களாலும் தழுவி யெடுத்து, "ஞானசம்பந்தா! அஞ்சற்க!" என்று அபயங் கொடுத்து, சந்நிதானத்தில் வடக்கு முகமாய் அமரவைத்துத் திருவருள்நோக்கத்தால் ஞான தீக்கை செய்து, தலைமேல் திருவடிக் கமலஞ் சூட்டி, சிவஞானோபதேசஞ் செய்து, சொக்கலிங்க பூசையும் எழுந்தருளச் செய்து கொடுத்தருளினார். ஞானசம்பந்தர் அச் சொக்கலிங்கப் பெருமானை ஞானபூசா முறைப்படி வழிபட்டு, 'சொக்கநாத வெண்பா' என்னும் செந்தமிழ்ப் பாமாலை சூட்டியும், தம் குருநாதராகிய ஞானப்பிரகாச தேசிகரை, 'ஞானப்பிரகாச மாலை' என்னும் நற்றமிழ் நூலாற் புகழ்ந்தும் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி வழிபட்டு நின்றார்.

பின்பு, ஞானசம்பந்தர் திருவாரூரில் குருநாதரின் திருவடி நிழலில் வைகிக் குருபணிவிடையை அன்பின் முதிர்ச்சியால் ஆற்றிக்கொண்டு வருங்கால், ஒருநாள் சீடர் பலருடன் தாமும் குருமூர்த்தியின்பின் கோயில்புக்கு அர்த்தயாம தரிசனஞ் செய்துகொண்டு திரும்புகையில், கைவிளக்குப் பணிவிடை செய்வோன் தூங்கி விட்டமை யறிந்து ஞானசம்பந்தர் தாமே சென்று கைவிளக்கை யெடுத்துக் கொண்டு, அத் திருப்பணி செய்யும் பேறு அன்று தமக்குக் கிட்டியதை எண்ணி மகிழ்ச்சி கூர்வாராய், குருநாதருக்கு முன் கைவிளக்குக் காட்டிச் சென்றார். மடத்தினுள் புகுமுன் ஞானப்பிரகாச தேசிகர் ஞானசம்பந்தரை நோக்கி, 'நிற்க' எனப் பணித்துத் தாம் உள்ளே சென்றுவிட்டார்,

ஞானசம்பந்தர் தம் குருநாதர் பணித்தபடி கைவிளக்கைப் பிடித்தவாறே தமக்குபதேசித்தருளிய சிவ ஞானோபதேச நிலையிலேயே விடியுங்காறும் நின்றார். அன்றிரவு, பெருமழை பொழியாநிற்கவும் திருவருள் நோக்கால் அவர் திருமேனியில் ஒரு துளியும் படாது ஒருகோல் தூரம் வரைச் சுற்றிலும் சிறை யமைத்தது போல் மண்ணகத்தும் நீர் புகாமல் நின்றது. மறுநாள் வைகறைப் போதில் சாணந் தெளிக்க வந்த குருபத்தினியார் ஞானசம்பந்தரது நிலைகண்டு வியப்பில் ஆழ்ந்த வராய் உள்ளே திரும்பியோடி ஞானப்பிரகாசருக்கு அறிவிக்க, அவர் விரைந்து வந்து பார்த்துத் திருவருளின் ஆற்றலைச் சிந்தித்துக் கண்களில் நீர் ததும்ப ஞான சம்பந்தரைச் சென்று தம் இரு கைகளாலும் இறுகப்புல்லிக் கொண்டு, " நீர் அனைவர்க்கும் அருளொளி வழங்கும் குருநாதராகி விட்டீர்; இனி நீர் உமது விருப்பின்படி வேண்டிய விடத்திற் சென்றிருந்து உம்மை வந்தடையும் பக்குவர் களுக்குச் சிவ ஞானோபதேசஞ் செய்து, சமய பரிபாலனம் நடாத்தி வருவீராக" எனக் கட்டளையிட்டருளினார். அதனைக் கேட்ட குருஞானசம்பந்தர் மனம் பதைத்து, " அடியேன் தேவரீரை விட்டு எங்ஙனம் பிரிந்திருக்க வியலும்" என்று பலவாறு விண்ணப்பித்து நின்று,

" கனக்கும் பொதிக்கும் எருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சை யோஇணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுள் ஞானப்ர காச சிதம்பரஇன்று
உனக்கிச்சை எப்படி அப்படி யாக உரைத்தருளே."

என்னுங் கட்டளைக் கலித்துறையால் குருநாதர் கட்டளைப்படி நடப்பதன்றித் தமக்குச் சுதந்தரமில்லை என்பதைத் தெரிவித்துக் கொண்டார். அதனைக் கேட்டருளிய ஞானப்பிரகாச தேசிகர் உளங்கனிந்து, " ஞானசம்பந்தரே! நம தாருக்கு வடக்கே இரண்டு யோசனை தூரத்துக்கப்பாலுள்ள மாயூரத்திற்குக் கிழக்குத் திக்கில், எமதருமன் வழிபட்டு, அருள் பெற்றதும், அகத்திய முனிவர் முதலிய முனிபுங்கவர்களால் வழிபடப் பெற்றதுமான வில்வாரண்யமாகிய தருமபுரத்தைச் சென்றடைந்து, பக்குவிகட்கு ஞானோபதேசஞ் செய்து, சைவ சித்தாந்த சமய பரிபாலன பீடாதிபதியாய் வாழ்விர்" என்று ஆணை தந்தருளினர்.

அவ்வண்ணமே குருஞானசம்பந்தரும் திருவாரூரை அரிதின் நீங்கி, திருவாஞ்சியம் முதலிய தலங்களை வழிபட்டுக்கொண்டு தருமபுரத்தை யடைந்து அங்கு ஸ்ரீ தருமபுரீசுவரரையும் அபயாம்பிகையையும் தரிசித்து வணங்கி, அக் கோயிலின் மேற்புறத்திலுள்ள வில்வாரணியத்தில் ஓராச்சிரமம் அமைத்து அதில் சொக்கநாதப் பெருமானை எழுந்தருளுவித்துப் பூசித்தும், தம்மையடைந்த பக்குவர் கட்கு ஞானதீக்கை புரிந்து ஞானோபதேசஞ் செய்தும் பற்பல அற்புதங்களால் திருவருளை விளக்கிக் கொண்டும் எழுந்தருளி இருந்தார். சிவபோகசாரம், முத்தி நிச்சயம், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், சோடசகலாப்பிராசாத ஷட்கம் முதலிய அனுபவ நூல்களாகிய ஞான சாத்திரங்களையும், பல தோத்திர நூல்களை யும் செய்தருளினர்.

ஆங்குள்ள ஸ்ரீ தருமபுரீசுவரருக்கு நித்திய நைமித்திக பூசனை முதலியவைகளை நடாத்திக்கொண்டிருந்த அகத்தியருடைய மாணுக்கராகிய முனீந்திரர்கள் குருஞானசம்பந்தரது பேரருட் குணங்களைக் கண்டு பெருமகிழ்வு கொண்டவர்களாய்த் தமக்குரிய ஆச்சிரமங்களையும், சிவாலயத்தையும் அவரிடம் ஒப்புவித்து, அவைகளைக் காத்தோம்பி வர இரசவாத முதலிய சித்திகளையும் உபதேசித்து, "எங்களைப் போலவே இவைகளை நீவிரும், உமக்குப் பின்வரும் சந்ததியாரும் பரம்பரையாய்ப் பரிபாலித்து வருவீர்களாக" என்று ஆசீர்வதித்துச் சென்றனர். குருஞானசம்பந்தர் அவ்வண்ணமே ஏற்று சிவாலயத் திருப்பணி, திருவிழா முதலியவைகளை நடாத்திக்கொண்டு வந்தார்கள்.

ஒருசமயம் அவர்கள் தில்லைக் கூத்தப்பிரானைக்கண்டு வழிபடும் அவாமிக்கு அவண் போந்தருளி ஆயிரக்கால் மண்டபத்தில் இரவும் பகலுமாய் ஆனந்த நிட்டை கூடியிருந்தனர்; ஒருநாள் ஆடவல்லாரின் அருட்பாங்கால் சிவகாமியம்மையார் அன்பர்க்கு அருளிச்செய்யும் விருப்பில் நள்ளிரவிலே தமது பள்ளியறையில் வைத்துள்ள வெள்ளி வள்ளத்திலுள்ள பாயசத்தையும், பொன் வள்ளத்திலுள்ள திருவமுதத்தையும், கங்கைநீரையும் கொடுபோந்து அளித்தருளினர்.

இக் குருமூர்த்திகள் ஞானநாட்டத்தால் ஆவும், புலியும் தம்முள் மாறின்றி ஒரே குளத்தில் நீர் பருகி, ஒரே பொழிலிற் களித்து விளையாடும்படி ஞான அரசு செலுத்தினர்கள். ஸ்ரீ தருமபுரீசுவரர் ஆலயத்துக்கு மேற்கே திருக்கோயில் கட்டிச் சிவலிங்கப் பிரதிட்டை செய்தார்கள். தமக்கு அண்மையில் பரிபூரண தசை வருதலைத் திருவருளுணர்த்த உணர்ந்து அச் சிவலிங்கப் பெருமான் திருவடி நீழலிற் சமாதிகூடத் திருவுளங்கொண்டு தமது அடியார்களில் அதிதீவிர பக்குவராகிய ஆனந்தபரவசருக்கு ஞானோபதேசஞ் செய்து, தமது பீடாதிபத்தியத்தையும் சொக்கலிங்க பூசையையும் கொடுத்தருளி, "நீர் நமது பீடத்திலிருந்துகொண்டு ஞானோபதேசஞ் செய்து சொக்கநாதரைப் பூசித்து, சிவாலயத்தையும் சைவ சமயத்தையும் பரிபாலித்து வருவீராக" எனப் பணித்தருளிச் சிவசமாதியெய்தினர்.

**2-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக சுவாமிகள் :—** ஆனந்தபரவசர் அருள் ஒழுக்கத்தில் தலைநின்றபெருந் துறவியாதலான் குருவருள் ஒன்றையே நாடிநின்றார். அதை எய்தியதும் சிவஞானமிக்கோங்கியதால் ஆனந்தக் கண்ணீர் ததும்பத் தம் குருவின் சமாதி முன்னிலையில் வீழ்ந்து பரவி வணங்கினர். அதன் மேற்பக்கலிற் சென்று, தம் குருமூர்த்தியின் திருக்கோயிற் சிகரத்தைத் தரிசித்தவண்ணம் கிழக்கு முகமாயிருந்து, சமாதி கூடி, சிவானந்தாத்வைத முத்திநிலை யெய்தினர்கள்.

**3-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் :—** ஆனந்தபரவசர் முத்தியெய்தியதைக் கண்டு உணர்ந்த அடியார்கள் பிறவிப் பெருங்கடல் கடக்கப் புணையருளும் குருமூர்த்தியின் திருவடிமலர்

நீழலை யிழந்தோமே' எனக் கவன்றனர். சமாதி கூடியிருந்தருளும் குருஞான சம்பந்தரது சந்நிதானத்தை யடைந்து, 'தேசிகர் மீளவும் எழுந்தருளிப் போந்து வாழையடி வாழையென வரும் ஒழுகலாற்றினையும், அடியோங்களையும் ஓம்பியருள வேண்டும்' எனக் கசிந்துருகி வேண்டினர். ஞானதேசிகரும் அருளிச்செயலால் உணர்ந்து, மீட்டும் சமாதியினின்று எழுந்தருளித் தம்மடியார்களில் ஒருவராகிய சச்சிதானந்தருக்குத் திருவடி மலர் சூட்டி ஞானநீராட்டி, சொக்கநாத பூசையையுங் கொடுத்தருளினர். அவ்வாறு செய்தும் அவருக்கு ஞானசமாதி கூடிவாராமையால், குருஞானசம்பந்தர் மறுமுறையும் எழுந்தருளிவந்து திருவருணோக்கஞ்செய்து,

தானந்த மாதிநடு வில்லா தோங்கும்
சச்சிதா னந்தமயந் தானே யாய
ஆனந்த பரவசரைக் கண்டுங் கண்டு
மந்தந்தோ பரகதியை யறிந்தீ ரில்லை
மானந்தான் வடிவாகி நிற்ற லாலோ
மலமாயை கன்மமிவை மடியா தாலோ
ஞானந்தா னுமதுளத்தி லுதியா தாலோ
நாமறியோ முமதுமய னவிற்று வீரே!

என்ற தமிழ்ப் பாடலைத் திருவாய் மலர்ந்தருளவே சச்சிதானந்தர் அந் நிலையினை யெய்தினர்; அஃதுணர்ந்து மகிழ்வு கூர்ந்தருளிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள், 'இனி, நீர் நமது பீடாதிபதியாய் வீற்றிருந்து கொண்டு, செந்தமிழ்ச்சொக்கரை வழிபட்டு, பற்றற்று பற்றற்றான் பற்றினையே பற்றிநிற்கும் பக்குவிகட்குச் சிவஞானோபதேசஞ்செய்து வருவீராக' என அருளாணையிட்டு, **வைகாசித்திங்கள் அமரபக்க சப்தமி** நன்னாளிலே சிவசமாதி கூடினார்கள். அதுமுதலாகத் தருமபுரஆதீன ஞானபீடத்தின் அருளரசு வழிவழியாக விளங்கிவருகின்றது.

சச்சிதானந்த தேசிகரும் குருநாதன் பணித்தவண்ணம் சின்னாள் சமயச் செங்கோலோச்சித் தமது அடியார்களுள் ஒருவராகிய மாசிலாமணி தேசிகருக்கு ஞானோபதேசம் பண்ணியருளி முத்திப்பேற்றை எய்தினார்கள்.

**4-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகள் :—** இவர்கள் தமக்கு அடியார்கள் செய்த பாதபூசையில் இட்ட மலர்கள் திருமுறை ஏடுகளின்மேல் இருக்கக் காட்டினார்கள். தம் அன்னையார்க்கு நிருவாண தீக்கையால் முத்தியளித்தார்கள். பாம்புகடித்து இறந்த ஒருவனை எழுப்பியருளினார்கள். ஸ்ரீ குமரகுருபரசுவாமிகளை ஆட்கொண்டருளினவர் இவர்களே. முத்தி நிச்சயப்பேருரை, ஞானாவரண விளக்கம் முதலியவைகளை ஆக்கியருளிய ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவர் இவர்கள்பால் சைவ சந்நியாசம் பெற்றவர்கள்,

**5-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்த தேசிக சுவாமிகள் :—** இவர்கள் தல யாத்திரையில் திருக்குற்றாலம் சென்றிருந்தபொழுது அங்கே பெருகிய ஆற்றுவெள்ளத்தை அடங்கச் செய்து, இன்னலுற்ற மக்களை இடுக்கணினின்றும் எடுத்தருளினார்கள். ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவருக்கு இவர்கள் ஞானோபதேசம் செய்தருளினார்கள்.

**6-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருஞானசம்பந்த தேசிக சுவாமிகள் :—** இவர்கள் காலத்தில் சோடச (பதினாறு) கலாப் பிராசாத யோகம் பயிலுதற்குரிய பதினாறு ஒடுக்கம் மிகவும் சிறப்புற்று விளங்கியது. அதில் பலர் அவ்யோகத்திலேயே இருந்தனர். அவர்களுக்கு உணவு அளித்தற்கு அமைத்த சிறு வாயில் இன்றும் காணப்படுகிறது. அடியார்களது வேண்டுகோளின்படி இவர்கள் மேற்கொண்ட தட்சிண யாத்திரையில் திருநெல்வேலிச் சிந்துபூந்துறை மடத்தில் எழுந்தருளியிருந்த பொழுது, தில்லைக் குகைமடம் ஞானப்பிரகாசர்பால் உபதேசம் பெற்று ஆன்மானந்தவாதியாய் அறச்சாலை என்ற மடத்தில் இருந்த புலவர் ஒருவரை தமது அருட் காட்சியால் வசீகரித்து ஆட்கொண்டு, 'தமிழாகர முனிவர்' எனத் தீட்சா நாமம் சூட்டியருளினார்கள். பின்பு மலைநாடு செல்லும் வழியில் வேள்வி மலையில் உள்ள முருகனை வழிபடும்பொழுது, வள்ளியம்மை திருவுருவம் இவர்களது விழிக்கு நேர்படாத இடத்தில் இருந்தது. அதனால், 'இங்கு வள்ளித்தாய் இல்லையோ' என்று இவர்கள் வினவ, 'இதோ இருக்கின்றேன்' என்று சொல்லி அத் தாய் தன் திருமேனியை வளைத்துக் காட்சிகொடுத்தருளினார். இச்செய்தி க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழில் குறிக்கப்பட்டுள்ளது. இத்திருவுருவம் இன்றும் இந்நிலையிலே உள்ளது. கந்தபுராணச் சுருக்கத்தை அருளிச்செய்த ஸ்ரீ சம்பந்தசரணாலயர் இவர்களிடம் ஞானோபதேசம் பெற்றவரே.

**7-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிக சுவாமிகள்:-** இவர்கள் மூவலூர்ச் சுப்பராயச் செட்டியார் என்பவரது வேண்டுகோளுக்கு இணங்க, இறந்த அவரது தாயினது ஆன்மா அச்செட்டியாரது மனைவியார் வயிற்றில் கருவாய்த் தங்கியிருந்ததைத் தங்கள் பூசைமுகத்தில் கொணர்ந்து தீக்கை செய்து வீடுபெறச் செய்தார்கள்.

இவர்கள் காலத்தில்தான் கடலாடக் காவிரிப்பூம்பட்டினம் சென்ற தஞ்சை மன்னன், தருமபுரத்தில் உள்ள ஞானபுரீசுவரரது அர்த்தயாமபூசை மணியோசையைக் கேட்டு ஊர்தியினின்றும் கீழ் இறங்கி வணங்கிப் பின்னர்ச் சிலர், சூத்திர சமாதியை வணங்கிப் பாவத்திற்குள்ளானீர்; இதற்கு நீர் கழுவாய் செய்து கொள்வதுடன், பிறருக்கும் இந்நிலை ஏற்படாதவாறு இச்சமாதியை இடித்துவிடல் வேண்டும். என்று சொல்லிய சொல்லில் மயங்கி அங்ஙனமே ஏவலரை அழைத்து இச்சமாதியை இடியுங்கள் என்று சொல்லிச் சென்றான். ஏவலர்கள் அங்ஙனமே வந்து செய்தபொழுது, இவர்கள் 'ஈசன் பலவீனன் என்றக்கால்' என்ற சிவபோகசார வெண்பாவைச் சொல்லியருள இறைவன் தனது திருநடனச் சிலம்பொலியைக் கேட்பித்தான்.

அதனால், அதனைக்கேட்டு, அகம்மகிழ்ந்து 'தேசம் சிவாலயங்கள்' என்ற மற்றொரு வெண்பாவை அருளிச்செய்ய, இடித்த இடந்தோறும் குருதிபொங்க, ஏவலர்கள் மூர்ச்சித்து விழுந்தனர். மன்னனுக்கும் கண்ணொளிமறைந்தது. மன்னன்மனத்தை மயக்கத்துக்குள்ளாக்கிய மாந்தரும் ஊமையராயினர். அதனால், அச்சமும் அவலமும் எய்திய அரசன் இக் குருமூர்த்திகளிடம் வந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நிகழ்ந்தவைகளைக் கூறிப் பிழையைப் பொறுத்து அருள்புரியுமபடி வேண்டினான். இக்குருமூர்த்திகள் ஞானபுரீசர் சந்நிதிக்கு அரசனை அழைத்துச் செல்ல, குருஞானசம்பந்தர் அருளால் அரசனுக்கு ஒருகண் விளக்கம்பெற்றது. பின்னர் அவனது வேண்டுகோளின்படி குருமூர்த்திகள் திருநீற்றைத் தெளித்தருள ஏவலர் மூர்ச்சை தெளிந்தெழுந்தனர். அரசன் தன் பரிவாரங்களுடன் தென் கீழ்த்திசையில்தங்கி ஒருமண்டலம் ஞானபுரீசுவரரை வழிபட்டு மற்றொருகண்ணையும் பெற்றான். ஏனையோரும் ஊமைநீங்கப்பெற்றனர். அரசனது ஐயம் அகலஇவர்கள் 'வருணாச்சிரம சந்திரிகை' என்ற ஒரு நூலையும் செய்தருளினார்கள். அரசன் தான் வழிபட்ட அர்த்த யாம பூசை என்றும் நடைபெறச் சில நிலங்களை அளித்து இவர்களிடம் விடைபெற்றுச் சென்றான், அவ்வரசனது அமைச்சராகிய கோவிந்த தீக்ஷிதர் என்பவரும் இக்குருமூர்த்திகள்பால் பக்தி விசுவாசத்துடன் சில பணிகளைச் செய்துள்ளார்.

**8-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பல தேசிக சுவாமிகள் :—** இவர்கள் தென்னாட்டு யாத்திரையில் 'கற்குளம்' என்னும் நகரில் எழுந்தருளியிருக்குங்காலை சிலரது தூண்டுதலின்படி தம்மிடம் வந்து மகப்பேறு வேண்டும் என்று விண்ணப்பித்த மலடியான பேரிளம்பெண் ஒருத்திக்குத் தமது பரிகல சேடத்தைக் கொடுத்து மகப்பேறு பெறச் செய்தருளியவர்கள். அதனால் அப்பெண் தான் பெற்ற மகனுக்கு, 'அழகிய சிற்றம்பலப் பரிகலம்' என்று பெயரிட்டுக் குருமூர்த்திகளை வந்து வணங்கிச் சென்றாள்.

**9-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருநாவுக்கரசு தேசிக சுவாமிகள் :—** இவர்கள் வேளூர் முத்துக்குமார சுவாமியை வணங்கச் சென்ற பொழுது, திருமுன் தொங்கவிடப்பட்டிருந்த திரை தானாகவே விலகியது. இவர்களுடன் எதிர்வாதம் புரிந்த வைணவ மகன் ஒருவன் மறக்கருணை நோக்கால் ஊமையாகிப் பின் அறக்கருணை நோக்கால் ஊமை நீங்கப்பெற்று உண்மை உணர்ந்தான். இவர்களது அருள்நோக்கில் புலியும் பசுவும், பூனையும், கிளியும் போன்ற அஃறிணை உயிர்கள் பகையின்றி ஒன்றுபட்டு வாழ்ந்தன. இவர்கள் 'சித்தாந்த நிச்சயம்' என்னும் ஞானசாத்திரத்தை அருளிச்செய்துள்ளனர். '**படிக்காசு தம்பிரான்**' என்னும் புலவர் இவர்களிடம் சைவ சந்நியாசம் பெற்று வேளூர் கட்டளை விசாரணையில் இருந்தவராவார்.

**10-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள்:-** இவர் நிகழ்த்திய அற்புதங்கள் பல. யோக நெறியில் சில சித்திகள் கைவரப் பெற்ற சித்தர் ஒருவர் ஒருநாள் இரவு தருமபுர மடத்திற்கு மேலே வான்

வழிச் செல்ல அவரது செலவு தடைப்பட்டது. அப்பொழுது அங்கு நிலா முற்றத்தில் நிழல் விழுவதைப் பார்த்த இக்குருமூர்த்திகள் அந்நிழலை 'இங்கே வருக' எனக் கையசைத்து அழைத்தார்கள். சித்தர் அப்பால் செல்லமாட்டாதவராய்க் குருமூர்த்திகளை அடைந்து வணங்கித் தமக்கு ஞானத்தை யருளும்படி வேண்டினர். அங்ஙனமே இவர்கள் திருவருள் பாலித்துத் தம் திருக்கூட்டத்து அடியவருள் ஒருவராகச் செய்தார்கள்.

சேதிமாநகரத்தினின்றும் குடும்பத்துடன் போந்து இக் குருமூர்த்திகளைத் தரிசித்த வேளாளர் ஒருவர் தம் மருமகளுக்குச் சிவதீக்கை செய்தருளுமாறு வேண்ட இவர்கள் அங்ஙனமே பூசை மடத்தில் தீக்கை செய்வித்தபொழுது அப் பெண் ஞானத்தில் மட்டுமன்றி வயதிலும் மூப்புடையவளாய்,

" மதுரா புரிச்சொக்க ஞானப்ர காசன் மடாலயத்தில்
சதுரான காரியம் செய்ததென் னேயிந்தத் தாரணியில்
முதிரா இளம்பிஞ்சை நற்கனி யாக்கும் முறைமையென்ன
எதிரா மலமறுத் தென்னையும் ஆட்கொண் டிருந்தனனே "

என்னும் பாடலைப்பாடி வணங்கி இறுதி வரையில் ஞானசம்பந்தர் திருமுன்னே தவம் செய்திருந்து முத்திபெற்ருள்.

இவர்கள் தென்னாட்டு யாத்திரையில் மதுரையில் பெரும்பிணியாளன் ஒருவனைக் காளையார் தீர்த்தத்தில் முழுகி வருமாறு கட்டளையிட்டு அவன் பிணியைப் போக்கினார்கள். திருச்செந்தூருக்குச் சென்றபொழுது சிவிகை கைவிளக்கு முதலிய விருதுகளைத் தடுத்த போற்றிமார்களுக்கு முருகப்பெருமானே ஓர் அருச்சகர் வடிவில் வந்து அறிவுரை கூறியும் கேளாமையால் அவர்களை ஊமையராகச் செய்து மறைந்தார். அதனால், இவர்களது பெருமையை யறிந்த போற்றிமார்கள் செருக்கு நீங்கி வணங்க இக் குருமூர்த்திகள் திருநீற்றை யளித்து ஊமை நீங்கச் செய்தார்கள். மலைநாட்டில் 'துங்கன்' என்னும் அரசனது மகளைப் பற்றியிருந்த பிரமராக்கதத்தைத் திருநீறு அளித்து நீங்கச் செய்தார்கள். பின்பு அது தருமபுரம் வந்து இவர்களிடம், தனக்கு நற்கதி யருளுமாறு வேண்ட, அதற்கு ஒருகால அனுட்டான பலனை அளித்து நற்கதியடையச் செய்தார்கள். அன்றுமுதல் இவ்வாதீன குருமூர்த்திகள் ஒருகால அனுட்டானத்தை அதிகமாகச் செய்யும் வழக்கம் உண்டாயிற்று. இவர்கள் தென்னாட்டு யாத்திரையேயன்றிக் காசியாத்திரையும் செய்து அங்குச் சின்னாள் தங்கி மீளவும் தருமபுரத்துக்கு எழுந்தருளினார்கள். இவர்கள் பலரும் ஓதி உய்யும் வண்ணம் தோத்திர அருட்பாக்கள் பலவற்றை அருளிச்செய்துள்ளார்கள். அவை, திருவாரூர்ச் சித்தீச்சரத்துத் தக்ஷிணாமூர்த்தி அருட்பா, காசியில் உள்ள துண்டிராச கணபதி, விசுவநாதர், அன்னபூரணி, கேதாரநாதர், கால பைரவர் அருட்பாக்கள், தாரகப்பத்து முதலியனவாகும்.

**11-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் :-** இவர்கள் காலத்தில் அரசன் ஒருவன் மாறுவேடம் பூண்டு நள்ளிரவில், 'பசியால் வாடியவன்போல யாரேனும் சோறிடுவார் உண்டோ' என்று கூவினன். அறிதுயிலில் இருந்த இவர்கள் விழித்து, வந்தவன் அரசன் என்பதைத் திருவருளால் உணர்ந்து, தாங்களே மடைப்பள்ளியிற் சென்று அன்னம் முதலியவற்றை ஒரு பாத்திரத்தில் இட்டுக் கொணர்ந்து கொடுக்க, அரசன் பாத்திரத்தை எங்கே சேர்ப்பது என்றான். குருமூர்த்திகள், அரண்மனையிலேயே சேர்க்கலாம்' என்றார்கள். அரசன நாணமுற்றுத் திரும்பி, மறுநாட் காலையில் அமைச்சர் முதலானவர்கட்கு இவர்களது பெருமையைத் தெரிவித்து மகிழ்ந்தான். இவர்கள் வேதாரணியம் கோடிக்குழகரில் கடலாடத் திருவுளம் கொண்டு சென்றபொழுது அங்கு யாழ்ப்பாணம் கந்தப்ப செட்டியார் எனபவர் எதிர்கொண்டு தொண்டுகள் பல செய்தார். அவ்விடத்தில் நாத்திகர் சிலர் வந்து ' கடவுளில்லை ' என்று நாத்திக வாதம் செய்ய இவர்கள் தக்க நியாயங்களுடன் அவ்வாதத்தை மறுத்தார்கள். அவர்கள் பணிவிடையாள்போல ஆகி ஒருநாள் இரவு நஞ்சு கலந்த பாலைக் கொடுத்தார்கள். குருமூர்த்திகள் அதில் திருநீற்றை இட்டு உண்டு யாதொரு தீங்கும் இன்றியிருந்தார்கள். மறுநாட்காலை அவவஞ்சகர்கள இவர்களது பெருமையை அறிந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கி மன்னிப்புப் பெற்றனர்.

**12-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார தேசிக சுவாமிகள் :—** இவர்கள் திருநெல்வேலி மேடைத் தளவாய் முதலியார் அவர்களது வேண்டுகோளுக்கிணங்கத் திருநெல்வேலிக்கு எழுந்தருளிய பொழுது வழியில் திருக்கானப்பேர்த் தலத்தில் தங்கினார்கள், அங்கு மகப்பேறின்றி வருந்தியிருந்த **'அருணகிரி முதலியார்'** என்பவர் தம் மனைவியுடன் வந்து தமது குறையை விண்ணப்பித்துப் பரிகல சேடம் அருளுமாறு வேண்டினர். ஆனால் அது காலம் கடந்த இரவாய் இருந்தமையால் சிதறிக்கிடந்த அன்னங்களைப் பொறுக்கிவரப் பணித்து அவற்றையே அளித்தார்கள். அன்பினால் அவற்றையே அருணகிரி முதலியார் பெற்றுத் தம் மனைவிக்குக் கொடுக்கச் சில தினங்களுக்குப்பின் அவர்கட்கு நலல ஆண் மகவு பிறந்தது; அதற்கு. **'முத்துக்குமார பரிகலம்'** என்று பெயரிட்டுத் தருமைக்கு வந்து குருமூர்த்தியை வணங்கி மாகேசுர பூசையும் நடத்திச் சென்றார்.

**13-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்த தேசிக சுவாமிகள் :-** இவர்கள் காலத்தில் கல்வி நலம சிறந்த புலவர் பலர் நன்கு ஆதரிக்கப்பெற்றனர். சீகாழி அருணாசலக் கவிராயர், சிதம்பரநாதத் தம்பிரான் முதலிய சிலர் அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள். கிழக்கிந்தியக் கம்பெனியார் அறநிலையப் பாதுகாப்பை மேற்கொண்டது இவர்கள் காலமே (கி. பி. 1812),

**14-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கந்தப்ப தேசிக சுவாமிகள் :-** இவர்கள் திருநெல்வேலியில் எழுந்தருளியிருந்தபொழுது வானம் வறந்து குடிகள் வருந்தினர். கம்பெனியார் நிலவரியைச் செலுத்துமாறு வற்புறுத்தினர். அவ்வூர்த்

தண்டல் நாயகத்திடம் குடிகள் சென்று முறையிட, வெள்ளையராகிய அவர், 'உங்கள் பாதிரியிடம் (ஆசாரியரிடம்) ஒருவார்த்தை சொன்னால் மழை பொழிவித்து விடுவாரே' என்று ஏளனமாகக் கூறினர். அது கேட்டு வருந்திய மக்கள் இக்குருமூர்த்திகளிடம் விண்ணப்பிக்க, இவர்கள் புன்னகை பூத்து, "சைவ சமயம் சமயமெனில்" என்ற ஒரு வெண்பாவைப் பாடியருளப் பெருமழை பொழிந்து பஞ்சம் நீங்கியது. தண்டல் நாயகம் வெட்கி வந்து நூறு வராகன் காணிக்கை செலுத்திக் குருமூர்த்திகளை வணங்கி மன்னிப்புப் பெற்றார்.

இவர்கள் காசியாத்திரை செல்ல விரும்பி உடல்நிலை அதற்கு இயலாத நிலையில் இருந்தார்கள். இதை யறிந்து திருக்கூட்டத்து அடியவருள் ஒருவராகிய **விருத்தாசலத் தம்பிரான்** என்பவர், திருவனந்தபுரம் சென்று ஆலயத்தில் நின்று இசைக் கருவியால் இறைவனைப் பாடினர். இடை இடையே அரசன் புகழும் அப் பாடலில் இடம்பெற்றது. அம்பிகை அம்முனிவர் அறியாது அவரது தோளின்மேல் நின்று பாடலுக்கேற்ப ஆடிக்கொண்டிருந்தார். வழிபட வந்த அரசன் கண்ணிற்கு அந்நிலை புலனாயது. அதனால், அவன் முனிவரது தோளைப் பின்பக்கமாக வந்து தழுவிக்கொள்ள, முனிவர் திரும்பிப்பார்த்து வியப்படைந்து, அரசனால் அம்பிகையினது அருட் செயலை அறிந்தார். அரசன் இறைவன் புகழோடு எனது புகழையும் பாடியது ஏன்? என்று கேட்க, முனிவர் தம் குருமூர்த்திகளது விருப்பத்தை நிறைவேற்றுமாறு கூற, அவன் முனிவருக்குக் காசியாத்திரைக்கு வேண்டிய யானை ஒட்டகம் முதலியவற்றுடன் பெரும்பொருளையும் கொடுத்து உதவினன். முனிபுங்கவர் காசியாத்திரை சென்று கங்கையாடிக் கங்கைநீரை நிரப்ப முகந்து யானையின் மீதும், ஒட்டகத்தின்மீதும் ஏற்றிவந்து ஆதீன மடாலயத்தை யடைந்து ஒரு தொட்டியில் கங்கை நீரை நிறையச் சொரிந்தார். குருமூர்த்திகள் அதில் கங்கையில் முழுகுவதுபோல முழுகி மகிழ்ச்சியுற்றார்கள்.

**15-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகள் :—** இவர்கள் காலத்தில் ஒருசமயம் மழை பெய்யாதொழிந்தபொழுது, குடிகளின் முறையீட்டிற்கிரங்கிச் சொக்கலிங்கப் பெருமான் வழிபாட்டில் '**சாரங்கி**' என்னும் இசைக் கருவியைக் கொண்டு மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் உள்ள திருப்பதிகங்களைப்பாடி மழைபொழிவித்தார்கள். மணக்குடி ஆலயமும், தருமபுரீசுவரர் ஆலயமும் திருப்பணி செய்யப்பெற்றன.

**16-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் :—** இவர்கள் திருமுன்பில் திருக்கூட்டத்து அடியவருள் ஒருவராகிய '**ஆறுமுகத் தம்பிரான்**' என்பவர், மாயூரம் துலாக்கட்டத்தில் இருந்த, '**வெள்ளப் பள்ளம் சாஸ்திரிகள்**' என்னும் ஸ்மார்த்தரைப் பிரமசூத்திரபாடிய வாதத்தில் வென்று சிவபரத்துவத்தை நாட்டினர். அதனால் சாஸ்திரிகள் முனிவரை வணங்க, அவர், 'எம்மை வணங்க வேண்டா; எம் குருநாதரை வணங்குக' என்ன, அவ்வாறே அவர் குருமூர்த்திகளை வணங்கி, '**வெள்ளப் பள்ளம்**' என்னும் சிற்றூரையும் காணிக்கையாக அளித்தார்,

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இவர்களைப் பலமுறை வந்து கண்டு தரிசித்து, இவர்கள்மீது, 'சச்சிதானந்த தேசிகர் மாலை' என்ற நூலையும் பாடியுள்ளார்கள்.

**17-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் :—** இவர்கள் காலத்தில் ஆதீனத் தொடர்பான பல விவகாரங்கள் நன்முறையில் ஒழுங்கு செய்யப்பெற்றன. திருக்கடவூரில் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது. வைத்தீஸ்வரன்கோயில் திருப்பணி தொடங்கப் பெற்றது.

**18-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் :-** சீகாழி, திருநின்றியூர் திருக்கோயில்கள் திருப்பணி செய்யப்பெற்று கும்பாபிஷேகமும் செய்யப்பெற்றன. இவர்கள் மாணிக்கவாசக தேசிகருக்கு சின்னப்பட்டம் கட்டியருளினார்கள். சில ஆண்டுகளில் அவர்களிடம் ஏற்பட்ட மனவேற்றுமையால் காசி யாத்திரையாகச் சென்று, மீண்டு திருப்பனந்தாளில் எழுந்தருளியிருக்குங் காலத்தில் பரிபூர்ணமெய்தினார்கள்.

**19-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் :—** இவர்கள் இளவரசுப் பட்டத்திலிருந்து தம் குருமூர்த்திகள் காசி யத்திரை சென்றபொழுது தாங்களே மடாலயத்தின் எல்லாக் காரியங்களையும் கண்காணித்துவந்து, குருமூர்த்திகள் திருப்பனந்தாளில் பரிபூரணம் எய்திய பின் தாங்களே பீடாதிபதியாய் விளங்கினார்கள் திருவம்பல தேசிகர் என்ற ஒருவர் இவர்களுக்கு எதிராக வழக்குத் தொடுத்துத் தோல்வியுற்றார்.

**20-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் :** இவர்கள் திருவையாற்றுத் திருக்கோயில் திருப்பணியைத் தொடங்குவித்தார்கள்.

**21ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் :-** இவர்கள் காலத்தில் ஆலயப்பணிகளும், நித்திய நைமித்திகங்களும் சிறப்பாக நடத்தப்பெற்றன.

**22-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் :—** திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவராய் இருந்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள். இக்குருமூர்த்திகளிடம் அருள் உபதேசம் பெற்றவர்கள். இவர்கள் காலத்தில் ஆதீனத்திற்குப் பல இடங்களில் நிலங்கள் வாங்கப்பட்டன. மாயூரம் உயர்நிலைப்பள்ளி மாணவர் விடுதிக்கு ரூபாய் பதினாயிரம் நன்கொடை வழங்கப்பட்டது. ஆதீன வித்துவான் சுவாமிநாத பண்டிதர் அவர்களைக்கொண்டு மாயூரத்தில் சைவசித்தாந்த மாநாடு ஒன்றை நடத்துவித்தார்கள்.

**23-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் :—** இவர்கள் இடைக்காலத்தில் மிகுதியாய் இல்லாதிருந்த தென்னாட்டு யாத்திரையை மேற்கொண்டு சம்பிரதாயப்படி சிவிகையில் ஆங்காங்கு அன்பர்கள் பலர் எதிர்கொண்டு உபசரித்துப் பட்டணப்பிரவேசம் செய்விக்க எழுந்தருளிப் பல தலங்களையும் தரிசனம் செய்தருளினார்கள். திருநெல்வேலியில் மேடைதளவாய் முதலியார், கோட்டைப் பிள்ளைமார் முதலிய அன்பர்கள் வர வேற்று ஸ்ரீ சொக்கநாதருக்குக் கனகாபிஷேகம் செய்வித்தார்கள். சுவாமிநாத பண்டிதருடன், முத்துத் தாண்டவராயப் பிள்ளை, சோமசுந்தரம் பிள்ளை M.A., L.T., காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளை முதலியோர்களையும் ஆதீன வித்துவான்களாக ஏற்றுச் சம்பிரதாய நூல்கள் பலவற்றிற்கும் உரைவிளக்கம் முதலியன செய்வித்தார்கள். மகாமகத்தில் கும்பகோணத்தில் சைவ சித்தாந்த மாநாடு கூட்டிச் சொற்பொழிவு நிகழ்வித்தார்கள். இவ்வாறு சமயப் பரிபாலனத்துக்கு ஆவன பல இவர்கள் காலத்தில் செய்யப்பெற்றன.

**24-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக சுவாமிகள் :-** இவர்கள் காலத்தில் ஆதீன மடாலயத்தின் பல பகுதிகள் நன்கு புதுப்பிக்கப் பெற்றன. புதிய கட்டடங்களும் எழுப்பப்பெற்றன. வேதாகம பாடசாலை, தேவார பாடசாலையை நிறுவி மாணவர்களுக்கு இலவச உணவுச்சாலையை இவர்கள் ஏற்படுத்தினார்கள். குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளியும் நிறுவப்பெற்றது. தங்கள் ஆளுகைக்கு உட்பட்ட திருக்கோயில்களில் சமயச் சொற்பொழிவுகள் அவ்வப்போது நிகழ ஏற்பாடுகள் செய்தார்கள். ஆதீனத்திலும் மெய்கண்டான் மாநாடு முதலிய பல சித்தாந்த மாநாடுகளை நிகழ்வித்தார்கள்.

சென்னைச் சைவசித்தாந்த சமாஜம் முதலியவற்றின் சார்பில் ஆங்காங்கு நிகழ்ந்த சித்தாந்த மாநாடுகட்கு வேண்டும் உதவிகள் பல செய்யப்பெற்றன. சமயத்துறையில் மட்டுமன்றிச் சமூகநலம், பொதுநலத்துறை முதலியவைகளுக்காக காவளர்த்தல், குளம்திருத்தல், அன்னம்பாலித்தல், மருத்துவமனை அமைத்தல் எளிய மாணவர்களுக்குப் பொதுக்கல்வி உதவிகள் முதலிய பலவகைகளும் இவர்கள் காலத்தில் செய்யப்பெற்றன. தருமபுரத்தையே இவர்கள் ஒரு முன்மாதிரி நகர மாக அமைத்துக்காட்டினார்கள். மக்களிடையே சமயஞானம் பரவுதற்கு வாயிலாக வெளிவரும் ஆதீனத் திங்கள் இதழாகிய 'ஞானசம்பந்தம்' இவர்கள்காலத்தி லேயே தொடங்கப்பெற்றது. ஆதீன நூலகமும் நூல்வெளியீடுகளும் பெரிய அளவில் ஆக்கம்பெற்றன. தமிழகத்தின் பல இடங்களில் உள்ள தக்க புலவர் களுக்கு இவர்கள் 'தருமையாதீனப் புலவர்' என்னும் பட்டம் அளித்து சமயப் பணியில் ஈடுபடுத்தினார்கள். ஆதீனத் திருக்கோயில்களில் பல திருப்பணிகளும், மகாகும்பாபிடேகங்களும் நிகழ்த்தப்பெற்றன. இவர்கள் எல்லாவற்றையும் அவ்வப்பொழுது நேரில்சென்று பார்வையிட்டு வந்தமையால், திருக்கோயில் நிர்வாகம், மடாலய நிர்வாகங்கள் மிகவும் செம்மையுறலாயின. இம்முறையில் சமய பரிபாலனச் செயல்கள் இவர்கள் காலத்தில் மிகச் சிறப்புற நிகழ்ந்தன. இவர்கள் ஆட்சிநலன்கண்டு தக்கார்பலர்கூடி இவர்களது பத்தாண்டு ஆட்சிமுடிவில் ஒருபெரிய சிறப்புவிழா நடத்திவைத்தார்கள்.

**25-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் :—** தருமபுர ஆதீன ஞானபீடத்தில் இப்பொழுது ஞான அரசு வீற்றிருந்து அருட்செங்கோல் ஓச்சிவருபவர்கள் இவர்களே.

இவர்கள், தங்கள் ஞானபரம்பரை **திருக்கயிலாய பரம்பரையாய்** இருப்பதற்கேற்ப யாத்திரை மேற்கொண்டு திருக்கயிலாய தரிசனம் செய்து **கயிலைக் குருமணி**யாகவே விளங்குகிருர்கள். இவர்கள் ஆட்சியில் குருமூர்த்த ஆலயங்கள் எழில்பொருந்திய உயரிய விமானங்களுடன் திகழ்வவாயின. ஆதீன மடாலயப் பகுதிகளும், கிளை மடங்களும் புத்தம் புதியனவாய்க் காட்சியளிக்குமாறு திருப்பணிகள் செய்யப்பெற்றன. தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட திருக்கோயில்கள் பலவற்றிலும் சிறந்த திருப்பணிகளும் மகாகும்பாபிடேகங்களும் செய்யப்பெற்றுத் தூய்மையாக வைத்துப் பாதுகாக்கப்பெறுகின்றன. இத் திருக்கோயில்களில் மூர்த்திகட்குப்பொன்னுலும், இரத்தினத்திலும் திருவாபரணங்கள் பலவற்றைச் செய்வித்துச்சாத்தி மகிழ்ந்தார்கள். வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கும், வள்ளி தெய்வயானையர்க்கும் விலைமதிப்பில்லா நவரத்தின கவசம் அணிவித்து இணையில்லாப் பெருஞ்சிறப்புச் செய்தார்கள், திருக்கோயில்களுக்கு யானைகள் வாங்கிவைத்துப் பரிபாலித்து வருகின்ருர்கள். ஸ்ரீ தருமபுரீசுவர ஆலயத்தின் வடமேற்கில் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காதேவி ஆலயமும், ஸ்ரீ ஆனந்த பரவசர் பூங்காவில் வனதுர்க்காதேவி ஆலயமும், நூதனமாக அமைத்து நித்திய நைமித்திக வழிபாடுகள் சிறந்தவகையில் நடத்தப்பெறுகின்றன.

தருமபுரத்தில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப் பள்ளியும், தமிழில் வித்துவான் பட்டமும், வடமொழியில் 'சிரோமணிப் பட்டமும் பெறுதற்குரிய பல்கலைக் கல்லூரியும் நிறுவி நடாத்திவருகின்ருர்கள். பல்கலைக் கல்லூரியில் திருமடத்துத் தம்பிரான் சுவாமிகளும் தமிழ் பயின்று வித்துவான் பட்டம் பெறுகிருர்கள். வேத சிவாகம பாடசாலையும், திருமுறைப் பாடசாலையும் சிறப்புறப் பரிபாலிக்கப் பெறுகின்றன. ஆதீனத்தின் சார்பில் **திருநெறிய தெய்வத் தமிழ் மன்றம்** நிறுவி, அதில் பற்பல சமயச் சொற்பொழிவுகளும், மாநாடுகளும் நடத்தப் பெறுகின்றன. ஆண்டுதோறும் ஆவணிமூல விழாவில், பல துறையிலும் சமயத் தொடர்புகொண்டு விளங்கும் புலவர்கட்குப் பட்டங்களும், பரிசுகளும் வழங்கப் பெறுகின்றன.

சமயப்பிரசாரத்திற்கென இவர்கள் ஒரு தனி அமைப்பை ஏற்படுத்திப் பிரசார வாகனத்தின்மூலம் பல இடங்களிலும் தம்பிரான் சுவாமிகளையும், மற்றும் பல அறிஞர்களையும் கொண்டு சமயப் பிரசாரம் நிகழ்ச்செய்ததுடன், இதற்கென்றே சென்னைத் தியாகராயநகரில் சமயப் பிரசார நிலையம் ஒன்றை நிறுவி, அதில் **ஒடுக்கம். வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளைக்** கொண்டு, தலயாத்திரை, சமய வகுப்பு, தமிழ் வகுப்பு, வடமொழி வகுப்பு, இசை வகுப்பு, திருமுறை வகுப்பு, சாத்திர வகுப்புக்களும், சிறப்புக் காலங்களில் சமயச் சொற்

பொழிவுகளும் நடைபெறும் வகையில் சமயப்பிரசாரம் நடைபெறச் செய்துள்ளார் கள். இப் பிரசார அமைப்பின் செயல்முறைத் தென்னகத்தில் தமிழ்பேசப்படும் இடங்கள் எல்லாவற்றிலும் நிகழ்ந்து பயன் தந்துள்ளது.

நூல் வெளியீடுகள் பலவற்றில் திருக்குறளுக்கு உள்ள உரைகள் பலவற்றையும் தொகுத்த திருக்குறள் உரைவளமும், பன்னிரு திருமுறைகளையும் தனித்தனி நூலாகக் குறிப்புரையுடனும் அழகிய உயர்ந்த பதிப்பாக வெளிவரத் திருவுளம் பற்றினமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். திருமுறைகள் பன்னிரண்டில் ஒன்றுமுதல் எட்டு முடிய உள்ள திருமுறைகள் இதுகாறும் சிறந்த முறையில் வெளிவந்துள்ளன. இவர்களது அருளாணையின்வண்ணம் தமிழ், வடமொழி, ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளில் வெளிவந்துள்ள நூல்கள் எண்ணில. இந்நூல்கள் பலவும் உலக நாடுகள் பலவற்றிலும் உள்ள நூலகங்களுக்குச் சென்று பயனளித்துவருகின்றன. தக்க திருமுறை இசைவாணர்களைக்கொண்டு தேவார திருவாசகம் முதலிய திருமுறைகளை ஒலிப்பதிவு செய்த திருமுறை இசைத்தட்டுக்கள் வாயிலாக அனைத்திந்திய இடங்களிலும், மற்றும் வெளிநாடுகளிலும் திருமுறைப் பண்ணிசை வளர்ந்தோங்கச் செய்துள்ளார்கள்.

இவர்கள், தங்கள் திருக்கோயில்களில் மட்டும் அன்றி, மதுரை, திருச்செந்தூர், பழநி, திருவானைக்கா, ஸ்ரீரங்கம், திருச்சிராப்பள்ளி முதலிய திருக்கோயில் பலவற்றின் திருப்பணிகட்கும் மகாகும்பாபிடேகங்கட்கும் இலட்சக்கணக்கான பொருளை அவ்வப்பொழுது வழங்கினார்கள்; வழங்கிவருகின்றார்கள். டெல்லியில், 'உத்தர சுவாமிமலை' என்னும் நூதன ஆலயப் பிரதிட்டைக்கு இவர்கள் பெரிய அளவில் பொருளுதவி செய்துள்ளார்கள். ஸ்ரீ அப்பர் பெருமான் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் அவர்கள் அவதரித்த திருமனையைத் திருமடமாக அமைத்து அதில் ஸ்ரீ திருநாவுக்கரசரது திருவுருவம் நிறுவி வழிபாடு செய்யும் திருப்பணிக்கு முதற்கண் பெருந்தொகை அளித்துத் தொடங்குவித்துத் திருப்பணி நிறைவேறியபின் மகாகும்பாபிடேகத்தை மிகச் சிறக்கச் செய்தருளியதுடன், அங்கு நித்திய நைமித்திக வழிபாடும், திருமுறைப் பாராயணமும் என்றும் நடைபெறுவதற்கு ஓர் இலட்சம் ரூபாயை அறக் கட்டளையாக அமைத்துள்ளார்கள்.

சமய வளர்ச்சிக்கு மட்டுமன்றிச் சமுதாய நலத்திற்கும் இவர்கள் செய்துள்ள ஆக்கங்கள் பல. கல்லூரிகளிலும், உயர்நிலைப் பள்ளிகளிலும் தமிழில் முதன்மையாகத் தேர்ச்சியுறும் மாணவர்களுக்குப் பரிசுகளும், எளிய மாணவர்களுக்கு உதவியும், மருத்துவமனைகட்கு நன்கொடைகளும் அளித்தருளுகின்றார்கள். மற்றும், புயல், வெள்ளம், பஞ்சம் முதலியவற்றால் இன்னல் உண்டாகும் இடங்களில் மக்கள் இன்னலைப் போக்க அளிக்கும் உதவிகள் பல. ஆதீன குருபூஜை முதலிய சிறப்புக் காலங்களில் அவற்றின் நினைவாக இமயமுதல் குமரிவரை அவ்வப்பொழுது அன்னம் பாலிப்பு ஆங்காங்கு நடைபெறுகின்றது.

